# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 1 | மார்ச் 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 1 | March 10th, 2018 | Annual Subscription Rs. 100/-



நான் ஆன்மாவா?
அல்லது அகங்காரமா?



நான் என்பது ஆன்மாவாக இருந்தாலும் சரி, அல்லது அகங்காரமாக இருந்தாலும் சரி நமது மன அனுபவங்களையும் உணர்வுகளையும் நிர்வகிக்கும் எந்த பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளாமல் மட்டும் இருந்தால் போதும்...

மன அனுபவங்களுக்குக் கூட நாம் சுதந்திரம் வழங்கத் தேவையில்லை. அது சுதந்திரமாகத்தான் உள்ளது. அதன் சுதந்திரத்தில் நாம் குறுக்கிடாமல் இருந்தால் மட்டும் போதும். நம்முடைய செயலற்ற தன்மையைப் புரிந்து கொள்வதுதான் ஞானம். மன அனுபவங்களின் சுதந்திரமான இயக்கமே முக்தி.

– ஸ்ரீ பகவத்



# சென்னை காமராஜர் அரங்கத்தில் சிறப்பு முழுநாள் ஞான முகாம்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா?
அல்லது பாதையை நண்பர்களுக்கு
அனுப்ப விரும்புகிறீர்களா?



Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www. sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by

SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் புரிதலின் மூலம் ஞானத்தெளிவு பெற்று மனத்துயரங்களில் இருந்தும் பிரச்சினைகளிலிருந்தும் விடுபட்டு விடுதலை அடைந்தவர்கள் பலர் இருக்கிறார்கள். இருப்பினும் இந்த மெய் ஞானம், அதைத் தேடுதல் கொண்டவர்களை மட்டுமல்லாது அகப் பிரச்சினைகளால் அல்லல்படுவோர் அனைவரையும் சென்றடைய வேண்டும்.

நாம் எத்தனையோ ஞான முகாம்கள் நடத்தி வருகிறோம். இந்த ஞான முகாம்களில் நூற்றுக்கணக்கானவர்கள் மட்டுமே கலந்து கொள்கிறார்கள். இது போதாது. இன்னும் பல்லாயிரக்கணக்கானோரை சென்றடைய வேண்டியுள்ளதால் இதற்கு அடுத்தபடியாக ஆயிரத்து ஐநூறு அன்பர்கள் அமரும் அளவிற்கு சென்னையிலுள்ள **காமராஜர் அரங்கத்தில் வருகின்ற 2018 ஆம் ஆண்டு செப்டம்பர் 2ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை சிறப்பு முழுநாள் ஞானமுகாம் நடத்த ஏற்பாடு செய்துள்ளோம்.** இம்மாபெரும் நிகழ்ச்சி ஞானத்தேடுதல் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் புரிதலாக எளிமையாக்கப்பட்ட ஞானத்தை அனைவருக்கும் அறிவிக்கும் அறிவிப்பாக அமைய வேண்டும். இந்த சிறப்பு ஞானமுகாமில் ஐயா வழங்கும் புரிதலில் ஞானத்தெளிவு பெற்ற **ஹீலர் பாஸ்கர்** அவர்களும், **அக்கு ஹீலர். அ.உமர்ஃபாருக்** அவர்களும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றவுள்ளார்கள். இவர்களுடன் நாம் அனைவரும் கலந்து கொள்வதோடு புதியவர்களையும் அறிமுகப்படுத்துவது இச்சமுதாயத்திற்கு நாம் செய்யும் மிகச்சிறந்த பணியாகும்.

இச்சிறப்பு ஞான முகாமை பெரிய அளவில் நடத்த இருப்பதால் ஞான முகாம் நடைபெறும் அரங்கம் வாடகை கட்டணம், பார்க்கிங் கட்டணம், மதிய உணவுக்கான செலவு என நாம் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. ஒரு நபருக்கு ரூ. 400/- வரை செலவாகும் என கணிக்கப்பட்டுள்ளது. இருப்பினும் ஞானத்தை அனைவருக்கும் கொண்டு செல்ல வேண்டும் என்ற காரணத்தால் சலுகை கட்டணமாக நபருக்கு ரூபாய் 250/- என நிர்ணயித்துள்ளோம். பற்றாக்குறையை வரும் நன்கொடைகளை கொண்டு சமன்படுத்தலாம் என எண்ணியுள்ளோம்.

மேலும் இந்நிகழ்ச்சிக்கு 100 தன்னார்வத் தொண்டர்கள் (Volunteers) தேவைப்படுகிறார்கள். எனவே வாய்ப்புள்ளவர்கள் நன்கொடைகளை வழங்குமாறும் இந்நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற தன்னார்வத் தொண்டர்களாக இணைந்து தங்களது சேவையை வழங்குமாறும் அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஞானத்தை அனைவருக்கும் எடுத்துச்செல்ல வேண்டும் என்ற இந்த முயற்சிக்கு தங்களின் மேலான ஆலோசனைகளையும் வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக!

# நான் ஆன்மாவா?
## அல்லது அகங்காரமா?



- ஸ்ரீ பகவத்

"ஆன்மா என்பது அசைவற்றது. அது நித்திய சாட்சி. எல்லாவற்றுக்கும் அதுவே ஆதாரமாக இருந்தாலும், அது எந்தச் செயலையும் செய்வதில்லை".

"தன்னை ஆன்மா என்று அறிந்த ஞானி தனக்கு ஏற்படும் அனுபவங்கள் அனைத்தும் தனது அனுபவமல்ல என்றும், இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களில் வர்ஷிப்பதால் ஏற்படும் செயற்கையான விளைவுகளே என்றும் அறிந்து செயலற்று இருக்கிறார்."

- இப்படி ஆன்மிக சாஸ்திரங்கள் ஆன்மாவைப் பற்றி விவரிக்கின்றன.

ஆன்மா என்பது வெறும் ஆதார நிலை மட்டுமே என்றும், அதற்கு எந்தச் செயலும் கிடையாது என்றும் கூறுகிறார்கள்.

நம்முடைய மைய நிலை இந்த ஆன்மா என்று புரிந்து கொள்ள வேண்டும் என்றும் கோருகிறார்கள்.

ஒரு வண்டிச் சக்கரம் சுழலுவதால் தான் வண்டி ஓடுகிறது. அந்த வண்டி சக்கரமானது ஒரு அச்சின் மீது தான் பொருத்தப்பட்டுள்ளது. அந்த அச்சினை ஆதாரமாகக் கொண்டு தான் வண்டிச்சக்கரம் சுழலுகிறது.

சக்கரம் சுழல்வதற்கு அந்த அச்சு ஆதாரமாக இருந்தாலுங்கூட அந்த அச்சு சுழல்வதில்லை.

அச்சுடன் இணைக்கப்பட்டுள்ள சக்கரத்தின் ஒரு பகுதியில் எறும்பு ஒன்று உட்கார்ந்திருப்பதாக வைத்துக் கொள்வோம்.

சக்கரம் சுழலும் போது அந்த எறும்பு என்ன ஆகும்?

சக்கரம் சுழலும் போது, அதுவும் அதனுடன் சேர்ந்து சுற்றிக் கொண்டே வரும்.

ஆனால் அந்த எறும்பானது, சக்கரத்தின் மையமான அச்சின் மீது உட்கார்ந்து கொண்டால் என்ன ஆகும்?

சக்கரத்தின் சுழற்சி எதுவும் அந்த எறும்பைப் பாதிக்காது. அந்தச் சுழற்சி எதுவும் எறும்பைச் சுழல வைக்காது.

இப்படி நமது உண்மைச் சொரூபம் ஆன்மாதான் என்பதை அறிந்து கொண்டு, நான் என்று நமக்குள் சதா ஸ்புரித்துக் கொண்டிருக்கும் "நான்" என்னும் ஆன்மாவின் மீது நாம் அமர்ந்து கொள்ள வேண்டும். அப்படி நாம் அமர்ந்து கொள்வோமேயானால் நமது வாழ்வில் ஏற்படும் துன்பங்களும் துயரங்களும் நம்மைப் பாதிக்காது.

- இப்படி ரமண மகரிஷி கூறுகிறார். மற்றும் பலருங்கூட கூறுகிறார்கள்.

கனவைப் பற்றிய உதாரணத்தை நாம் பலமுறை பார்த்துள்ளோம்.

நமக்கு ஒரு கனவு ஏற்படுகிறது. அந்தக் கனவில் நாம் ஒரு அடர்ந்த காட்டினுள் நடந்து போய்க் கொண்டிருக்கிறோம். திடீரென கரடியொன்று நம்மைத் தாக்குவதற்கு ஓடி வருகிறது. நாம் அதனிடமிருந்து தப்பி ஓடுகிறோம்.

நம் கனவு அனைத்துமே நமது சிந்தனையால் - Thought டினால் உருவாக்கப்பட்டதுதான்.

நம்மைக் காட்டுவதற்கு ஒரு நினைவு, கரடியைக் காட்டுவதற்கு இன்னுமொரு நினைவு, காட்டினைக் காட்டுவதற்குப் பிரிதொரு நினைவு என்று ஒரே நேரத்தில் பல நினைவுகள் ஏற்படுவதில்லை.

ஒரு நினைவு தான் ஒரே நேரத்தில் அனைத்தையுமே காட்டுகின்றன.

கனவிலிருந்து விழித்துக் கொள்கிறோம். நாம் கண்டதெல்லாம் கனவு என்பது நமக்குப் புரிகிறது.

நாம் கனவு கண்டு கொண்டிருக்கும் போதும் அந்தக் கனவில் நாம் இருக்கிறோம். ஆனால் நாம் கனவு கண்டு கொண்டிருப்பவராக இருப்பதில்லை. கரடியால் துரத்தப்படும் ஒருவராக மட்டுமே இருப்போம்.

கரடியால் துரத்தப்படுபவரைப் பொறுத்த அளவில், அவர் வேறு, அவரைத் துரத்தும் கரடி வேறு. அவர் அந்தக் கரடியிடமிருந்து தப்பிப் பிழைக்க வேண்டும்.

ஆனால் கனவு காண்பவரைப் பொறுத்த வரையில் அந்தக் கனவில் ஏற்படும் அனைத்து அம்சங்களும் அவருக்குள் அடங்கிய ஒன்றாகும்.

கனவு காணும் அவர் கனவில் வந்த கரடிக்குப் பயந்து எங்கேயும் ஓடத் தேவையில்லை.

கனவு காண்பவர் நிஜமானவர். கரடியால் துரத்தப்படும் அடுத்தவர் நிஜமானவர் அல்ல. அவர் நமது கனவினால் உருவான கனவு மனிதர்.

கனவு காண்பவர் நனவு மனிதர்.

கனவினால் உருவாக்கப்பட்டவர் கனவு மனிதர்.

நனவு மனிதர் கனவில் வரும் கரடியிடமிருந்து விலகத் தேவையில்லை.

ஆனால் கனவு மனிதரால் அப்படி இருக்க முடியாது. அவர் கரடியிடமிருந்து தப்பி ஓடித்தான் ஆக வேண்டும்.

மேலும் நாம் கனவு காணும் போது. அது கனவென்பதே நமக்குத் தெரியாது.

அதனால் அங்கு கனவு மனிதர் மட்டுமே இருக்கிறார். அதனால் அவரால் நனவு மனிதராகச் செயல்பட முடியாது.

"கரடி என்பது ஒரு கனவு தான். அது உண்மை இல்லை" என்று அவரால் இருந்து விட முடியாது.

போக்குவரத்து அதிகமுள்ள ஒரு சாலையை நாம் குறுக்காகக் கடந்து சென்று கொண்டிருக்கிறோம்.

நமக்கு இருபுறத்திலும் வாகனங்கள் சீறிப்பாய்ந்து கொண்டிருக்கின்றன.

இங்கு நான் வேறு, நாம் எதிர்கொள்ளும் வாகனங்கள் வேறு. வாகனங்கள் எதுவும் நம் மீது மோதி விடக்கூடாது என்ற பயத்துடன் நாம் மிகுந்த ஜாக்கிரதையுடன் முன்னேறிச் செல்கிறோம்.

வாகனங்களைப் பொறுத்த வரையில் நனவு மனிதராகவே நாம் செயல்படுகிறோம்.

இந்த நிலையில் நனவு நிலை மட்டுந்தான் உள்ளதா அல்லது கனவு நிலையும் உள்ளதா?

கரடி வந்த கனவின் போது கனவு மட்டுமே இருந்தது, அங்கு கனவு மனிதர் மட்டுமே இருந்தார். நனவு மனிதர் அங்கு இல்லை. கனவிலிருந்து விழித்த பிறகு தான் நனவு மனிதர் உதயமாகிறார். அவரால் சுலபமாகக் கனவையும் கனவு மனிதரையும் உதாசீனப்படுத்த முடிந்தது.

வாகனங்களுக்கு மத்தியில் சாலையைக் கடக்கும் போது நனவு மனிதர் இருக்கிறார். அவர்தான் சாலையைக் கடக்கிறார்.

அந்நிலையில் கனவு மனிதர் இருக்கிறாரா? கனவு இருக்கிறதா?

இங்கும் கனவு இருக்கிறது. வாகனங்கள் ஏதாவது நம்மைக் காயப்படுத்தி விடுமோ என்ற பயம் இங்கு நம்முடைய கனவாக உள்ளது. கனவு இருக்குமிடத்திலெல்லாம் கனவு மனிதர் இருந்தே தீருவார்.

அதனால் இங்கும் கனவு மனிதர் இருக்கிறார்.

ஆனால் இங்கு நாம் தூக்கத்தில் இல்லாததால் கனவு மனிதரும் இருக்கிறார். நனவு மனிதரும் இருக்கிறார்.

ஒருவரே கனவு மனிதராகவும் செயல்படுகிறார். நனவு மனிதராகவும் செயல்படுகிறார்.

இந்த உதாரணத்தில் நனவு மனிதருக்கான செயல்பாடுதான் பிரதானமாக உள்ளது. ஆகவே அவருடைய கவனமும் செயல்பாடும் அவர் எதிர்கொள்ளும் வாகனங்கள் மீதே உள்ளன.

அதனால் அவருடைய கனவும், கனவு மனிதரும் முக்கியத்துவத்தை இழந்து விடுகின்ற தன்மைதான் உள்ளது.

இன்னுமோர் உதாரணம்.

உடல் நலம் சரியில்லையென்று மருத்துவப் பரிசோதனை மேற்கொள்கிறோம்.

பலவிதமான சோதனைகளுக்கான சாம்பிள்களை நம்மிடமிருந்து எடுத்துள்ளார்கள். இரண்டு நாட்களுக்குப் பிறகுதான் முடிவு தெரியும்.

இரண்டு நாட்கள் நாம் காத்திருக்க வேண்டும்.

இந்த இரண்டு நாட்களிலும் நமக்கு எந்த வேலையும் கிடையாது,

ஆனால் நம் மனதில் பலவிதமான கற்பனைகள் உதயமாகி விடுகின்றன.

தீராத நோய் நமக்கு வந்து விட்டதைப் போன்ற பயம் ஏற்பட்டு விடுகிறது.

இங்கும் கனவு மனிதர் இருக்கிறார்.

ஆனாலும் அவர் கனவு மனிதராகவும் நனவு மனிதராகவும் மாறி மாறிச் செயல்படுகிறார்.

கனவு மனிதராக மாறி பயப்படுகிறார். பிறகு நனவு மனிதராக மாறி அந்தக் கனவிலிருந்து விடுபட முயல்கிறார்.

அவர் நனவு மனிதராக மாறி விட்டார் என்றால் அதன் பொருள் என்ன?

கனவைக் கனவென்று எடுத்துக் கொள்ளும் தெளிவுக்கு வந்து விட்டார் என்பது தான் பொருள்.

மனோரீதியான தேவையற்ற கற்பனைகளையெல்லாம் வெறும் கனவு தான் என்ற முடிவுக்கு மட்டும் வந்தால் போதும். கனவு சம்பந்தமாக நனவு மனிதருக்கு எந்த வேலையும் கிடையாது,

ஆனால் அவரே தன்னை கனவு மனிதராகவும், பிறகு நனவு மனிதராகவும் மாற்றி மாற்றிப் புரிந்து கொள்ளும் காரணத்தினால் மட்டுமே அவர் தேவையற்ற அகப்போராட்டத்தில் சிக்கிக் கொள்கிறார்.

தூங்கும் போது ஏற்படும் கனவைப் பற்றி நாம் எந்த ஆய்வையும் செய்யத் தேவையில்லை. ஏனெனில் அது முழுமையாக நமக்கு அப்பாற்பட்ட ஒன்று.

நாம் தூங்காமல் விழித்திருக்கும் போது நமது மன அனுபவங்களாக ஏற்படும் கனவை மட்டுந்தான் நம்மால் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள முடியும்.

நமது மன அனுபவங்களைப் பொறுத்த அளவில் "நான்" என்னும் நமக்கு எந்த வேலையும், பொறுப்பும் கிடையாது என்பதைப் புரிந்து கொள்வதுதான் உண்மையை உணர்ந்து கொள்வதாகும்.

நாம் புற நிகழ்வுகளோடு சம்பந்தப்பட்டிருந்தாலும் சரி அல்லது மன அனுபவங்களோடு சம்பந்தப்பட்டிருந்தாலும் சரி 'நான்' என்னும் உணர்வு நமது மனதிலிருந்து மட்டுமே உருவாகிறது.

அது நனவாயினும் சரி அல்லது கனவாயினும் சரி, 'நான்' நம் மனதிலிருந்து தான் ஏற்படுகிறது. இந்த நான் என்பதற்கு நம் மன அனுபவங்களைப் பொறுத்த வரையிலும் அவற்றைச் சீரமைக்கும் எந்தப் பொறுப்பும் கிடையாது என்பதைப் புரிந்து கொள்வதையே ஞானம் என்று கூறுகிறோம். அது ஒரு வெளிச்சமற்ற இரவு. எதுவும் தெரியாத இருள் மட்டுமே உள்ளது.

சூரியன் வருகிறான். சூரியனின் ஒளியில், உயர்ந்து வளர்ந்த அரசமரம் ஒன்று காற்றில் அசைந்து கொண்டிருப்பது தெரிகிறது. சூரிய ஒளியின் காரணமாக மரத்தினடியில் மரத்தின் நிழலும் மரத்தின் அசைவுக்கேற்றவாறு அசைந்து கொண்டிருக்கிறது.

ஆன்மிக சாஸ்திரங்களை இணைத்து நாம் புரிந்து கொள்ள வேண்டுமானால், சூரியன் என்பது ஆன்மா.

அசைந்து கொண்டிருக்கும் மரம் என்பது மன அனுபவங்கள்.

அசைந்து கொண்டிருக்கும் நிழல் என்பதுதான், 'நான்' என்னும் நமது மன உணர்வு.

மரத்தை அசைய வைக்கவோ அல்லது அசையும் மரத்தை நிறுத்தவோ சூரியனுக்கு ஏதாவது வேலை உள்ளதா?

அதே போன்ற அதே வேலை மரத்தினடியில் விழுந்து கிடக்கும் மரத்தின் நிழலுக்கு ஏதாவது உண்டா?

நாம் நம்மை ஆன்மா என்ற சூரியனாக எடுத்துக் கொண்டாலும் சரி அல்லது நாம் நம்மை மரத்தின் நிழலாக இருக்கும் 'நான்' என்னும் மன உணர்வாக எடுத்துக் கொண்டாலும் சரி, அசைந்து கொண்டிருக்கும் மரமாக இருக்கும் மன அனுபவங்களைச் சீரமைக்கும் பொறுப்பை மட்டும் எடுத்துக் கொள்ளாமலிருந்தால் போதும் நான் என்பது ஆன்மாவாக இருந்தாலும் சரி, அல்லது அகங்காரமாக இருந்தாலும் சரி, அது எந்தப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளாமல் மட்டும் இருந்தால் போதும். **நம்மை ஆன்மா என்று எடுத்துக் கொள்வதன் மூலமாகவும், நாம் எதுவும் செய்யாது நமது மன அனுபவங்களுக்குச் சுதந்திரம் வழங்குகிறோம்.**

**நம்மை மன அனுபவங்களின் நிழலான அகங்காரமாக எடுத்துக் கொள்வதன் மூலமாகவும் நமது மன அனுபவங்களின் சுதந்திர இயக்கத்தில் குறுக்கிடாமல் இருந்து விடுகிறோம்.**

**மன அனுபவங்களுக்குக் கூட நாம் சுதந்திரம் வழங்கத் தேவையில்லை. அது சுதந்திரமாகத்தான் உள்ளது. அதன் சுதந்திரத்தில் நாம் குறுக்கிடாமல் இருந்தால் மட்டும் போதும். நம்முடைய செயலற்ற தன்மையைப் புரிந்து கொள்வதுதான் ஞானம். மன அனுபவங்களின் சுதந்திரமான இயக்கமே முக்தி.** ★

# மாணவ மாணவிகளுக்கான வாழ்வியல் முகாம்

பள்ளி மாணவர்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளில் இருந்து விடுபட்டு அவர்கள் கல்வியில் சிறந்து வாழ்வில் மேம்பாடு அடைவதற்காக அவர்களுக்கான சிறப்பு வாழ்வியல் முகாம் நடைபெறவுள்ளது. இதில் 10, 11 மற்றும் 12 ஆம் வகுப்புக்கு செல்லக்கூடிய மற்றும் 12ம் வகுப்பு முடித்த மாணவ மாணவிகள் மட்டும் கலந்து கொள்ளலாம். இவர்களுடன் ஆசிரியர்களும் கலந்து கொள்ளலாம்.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன், திருவருட்சோலை, கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், சேலம்.**

நாள் : 12.05.2018 சனிக்கிழமை காலை 8.00 மணி முதல் 13.5.2018 ஞாயிறு மதியம் 3.00 மணி வரை (11.5.2018 மாலை ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம்.)

மாணவர்களுக்கும் மாணவிகளுக்கும் தனித்தனி தங்கும் வசதி உள்ளன. மாணவ மாணவிகள் பெற்றோர் துணையுடனோ (அ) பாதுகாப்பாளர் துணையுடனோ வரவேண்டும்.

**தங்குமிடம், உணவு அனைத்தும் இலவசம். கட்டணமின்றி நடைபெறுவதால் இதற்கான செலவுகளை எதிர்கொள்ள நன்கொடைகளை வரவேற்கிறோம்.**

50 மாணவ மாணவிகள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் கலந்து கொள்ள ஆர்வமுள்ளவர்கள் முன்பதிவு செய்வது அவசியம்.

முன்பதிவு செய்வதற்கு கீழ்கண்ட விண்ணப்ப படிவத்தை பூர்த்தி செய்து ஏப்ரல் 20 ம் தேதிக்குள் ஸ்ரீ பகவத் மிஷனுக்கு அனுப்பி வைக்க வேண்டும். ஏப்ரல் 30 ம் தேதிக்குள் அனுமதி உறுதி செய்யப்படும்.

**விண்ணப்பம்**

மே மாதம் 12 மற்றும் 13 ம் தேதிகளில் நடைபெறும் மாணவ மாணவிகளுக்கான சிறப்பு வாழ்வியல் முகாமில் கலந்து கொள்ள விரும்புகிறேன்.

மாணவன் / மாணவி பெயர் : ..............................

2017-2018 படித்த வகுப்பு : ..............................

முழு முகவரி : ..............................
..............................
..............................

உடன் வரும் பெற்றோர் / பாதுகாவலர் பெயர் : ..............................

தொலைபேசி : ..............................

பாதுகாவலர் எனில் உறவு முறை : ..............................

விண்ணப்பம் வந்து சேர வேண்டிய கடைசி நாள் 20.4.2018

கையொப்பம்

# கேள்வி? பதில்...

## நான் என்பது நிஜமா? நிழலா?

V.A.P. **சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

**கேள்வி :** 'நான்' என்பது நிரந்தரமான ஒன்று அல்ல மாறிக்கொண்டே இருக்கக்கூடியது என்று ஸ்ரீ பகவத் ஐயா நூல்களில் குறிப்பிடுகிறார். ஆனால் எனக்கு நான் பிறந்தது முதல் இன்று வரை ஒரே நான் தான் நிரந்தரமாக இருப்பது போலவும் இந்த 'நான்' க்கு தான் எல்லா விதமாக இன்பத்துன்ப உணர்வுகளும் வந்து போவதாக தோன்றுகிறது,

நான் என்பது நிரந்தரமற்றது மாறிக்கொண்டே இருக்கிறது என்பதை எப்படி விளக்கிக்கொள்வது? புரியும்படி விளக்கவும்.

**பதில்:** பொதுவாக பெரும்பாலான நபர்கள் மேலே கூறியப்படி தான் நினைத்துக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால் உண்மை அப்படி இல்லை. இதில் நாம் கொஞ்சம் ஆழமாக சிந்தித்து ஆய்வு செய்துதான் புரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

'நான்' என்பது நிரந்தரமான ஒன்று, அந்த ஒன்றுக்கு தான் எல்லாவிதமான எண்ண உணர்வுகள், அனுபவங்கள் ஏற்படுவதாக நினைத்துக்கொண்டு இருக்கிறோம். அதாவது 'நான்' என்பது (Subject) நிரந்தரமான ஒன்று. அந்த 'நான்' என்ற Subject க்கு ஏற்படும் எண்ண உணர்வுகள் தான் Object. இது தோன்றி மறைய கூடிய ஒன்றுதான் என்று நாம் எண்ணிக்கொண்டு இருக்கிறோம். நாம் 'நான்' யை பற்றி இதுவரை இப்படி தான் புரிந்து வைத்துள்ளோம்.

பகவத் ஐயா 'நான்' என்பதை பற்றி எப்படி கூறுகிறார் என்பதைப் பார்ப்போம். எண்ணங்கள், உணர்வுகள், அனுபவங்கள் என்பவை எல்லாம் Subject ஆகும். இந்த Subject ன் நிழலைதான் (Shadow) நான் (Object) என்று கூறுகிறார். இன்னும் கொஞ்சம் ஆழமாக பார்த்தால் உண்மையில் எண்ண, உணர்வுகள், அனுபவம் என்பவை எல்லாம் கூட Subject கிடையாது. ஏன் எனில் நமக்கு ஒரு நாளைக்கு பல்வேறு எண்ண, உணர்வுகள் தோன்றி மறைந்து கொண்டே இருக்கின்றன. அதனால் அதுவும் கூட Object மட்டுமே. Object ன் நிழல் தோற்றம் (Shadow) தான் நான் என்பது ஆகும். நான் என்பது வெறும் நிழல் (Shadow) தோற்றம். இருப்பதை போல் காட்சி அளிக்கும் இல்லாத கானல் நீரைப் போன்ற மாயத்தோற்றமே இந்த 'நான்' ஆகும்.

இங்கு நாம் 'நான்' என்பதை பற்றி இரண்டு விதமான அணுகுமுறையை பார்த்துள்ளோம். ஏற்கனவே நாம் வைத்திருந்த அணுகுமுறைக்கு நேர் எதிரான அணுகு முறையை பகவத் ஐயா கூறிகிறார். நம்முடைய அணுகு முறையில் என்னதான் தவறு உள்ளது? நாம் எங்கே தவறாக புரிந்து கொண்டு இருக்கிறோம் என்பதை ஆய்வு செய்ய வேண்டியுள்ளது. அதேபோல் பகவத் ஐயா கூறுவது சரிதானா? அது எப்படி என்பதையும் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு இந்த 'நான்' என்ற தன்மையை பற்றி இறுதியாக ஓர் முடிவுக்கு வர வேண்டியுள்ளது. இனி நாம் நேரடியாக ஆய்வு களத்தில் இறங்குவோம்.

இவ்வளவு காலம் நாம் 'நான்' யை பற்றி சேகரித்துள்ள அனைத்து விசயங்களையும் கொஞ்ச நேரம் ஒதுக்கிவிட்டு நம்முடைய யதார்த்த அறிவுடன் திறந்த மனநிலையில் 'நான்' யை பற்றி சிந்திப்போமாக,

பொதுவாக நமக்கு மனதில் ஓர் எண்ணம், உணர்வு, அனுபவம் ஏற்படுகிறது என்றால் முதலில் எண்ணம் தாமாக தோன்றும் பிறகு அந்த எண்ணம் நமக்கு தோன்றியுள்ளது தெரியும். முதலில் எண்ணமும் அதன் முடிவில் எனக்கு (நானுக்கு) அந்த எண்ணம் தோன்றியுள்ளது என்பதையும் சேர்த்துதான் ஓர் எண்ணமாக உணர்கிறோம். ஓர் எண்ணம் என்றால் இரண்டு பகுதி சேர்ந்தேதான் இருக்கும். எண்ணம் என்ற ஒரு பகுதியும் எனக்கு எண்ணம் வந்துள்ளது என்ற அனுபவிப்பானாகிய இன்னொரு பகுதியும் சேர்ந்தே தான் தோன்றுகிறது,

நமக்கு 'அடுத்ததாக இந்த எண்ண, உணர்வுதான் தோன்றும்' என்று நம்முடைய நானால் கூற முடியுமா? ஒரு போதும் அப்படி கூற முடியாது. நமக்கு என்ன எண்ண உணர்வு தோன்றும் என்பது நம்முடைய நானுக்கு தெரியவே தெரியாது. எண்ணம் தாமாக தோன்றிய பின்னர் தான் எனக்கு இப்படி ஓர் எண்ணம் தோன்றியுள்ளது என்பதே தெரியும். எண்ணம் எப்படி கணந்தோறும் மாறிக்கொண்டே இருக்கிறதோ, அதேபோல் எண்ணுபவன் ஆகிய நானும் கணம் தோறும் புதிய புதிய நானாகவே தோன்றுகிறான். காணப்படும் பொருளுக்கு ஏற்ப காண்பவனும் மாறிக்கொண்டேதான் இருக்கிறான்.நிரந்தரமான காண்பவன் என்று எவரும் இல்லை.

நமக்கு ஏற்படும் பல்வேறு எண்ணங்களை தனித்தனியாக வேறுபடுத்தி பிரித்து புரிந்து கொள்ள முடியும். ஆனால் அதே போல் எண்ணங்களினால் உருவான எண்ணுபவன் என்ற நிழல் தோற்றத்தை தனியாக வேறுபடுத்தி பிரித்து பார்க்க முடியாது. ஏன் எனில் நான் என்பது வெறும் நிழல் மட்டுமே. இருப்பதை போல் தோற்றம் அளிக்கும் உண்மையில் இல்லாத மாயத்தோற்றம். எண்ணம் தோன்றி மறையும் போது தான், முடிந்துபோன ஓர் எண்ணத்தைதான் எண்ணுபவன் என்ற நானாக உணர்கிறோம்.

நமக்கு முதலில் எண்ணம் நம்முடைய முயற்சி எதுவுமின்றி தானாக தோன்றும். பிறகு அந்த எண்ணமேதான் எண்ணுபவன் என்ற நானாக மாறுகிறது. எண்ணமேதான் எண்ணம், எண்ணுபவன் என்ற இரண்டு பகுதிகளாக காட்சி அளிக்கிறது. நாமும்,

நம்முடைய நிழலும் சேர்த்து தான் நாம் என்று கூறுகிறோம். இதை தான் காணப்படும் பொருள், காண்பவன் என்று கூறுகிறார்கள், இவை இரண்டும் ஒரே எண்ணத்தின் இரண்டு பகுதியே ஆகும். காணப்படும் பொருள் மாறிக்கொண்டே இருப்பதை நம்மால் பிரிந்து புரிந்து கொள்ள முடிகிறது. காண்பவன் மட்டும் ஒருவனே இருந்துகொண்டு இருப்பதைபோல் காட்சி அளிக்கிறது, காண்பவனை நம்மால் ஏன் பிரிந்து பார்க்க முடியவில்லை? நாம் உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்ள முயற்சி செய்வோம்.

நல்ல வெயில் நேரம் நாம், நம்முடைய வீட்டிற்கு வெளியே நின்று கொண்டு நம்முடைய வீடு, வீட்டிற்கு அருகில் இருக்கும் மரம், நமது வாகனம், விளையாடும் நமது குழந்தைகள் என பலவற்றையும் பார்க்கிறோம். நாம் பார்க்கும் நமது வீட்டின் தோற்றம் அதன் வண்ணம் மரத்தின் தோற்றம், வண்ணம் இதேபோல் வாகனம் குழந்தைகளின் விளையாட்டு என ஒன்றையொன்றையும் தனித்தனியாக அதன் வடிவம் நிறம் என பல்வேறுபட்ட பகுதியை பிரித்து உணர முடியும். வீடு, மரம், வாகனம், குழந்தைகள் போன்றவற்றின் நிழலும் அவை ஒவ்வொன்றுடன் இணைந்தே ஒரே கறுப்பான நிழலாக காட்சி அளிக்கும். மேலே குறிப்பிட்ட காணப்படும் பொருளின் பல்வேறு வண்ணம், தோற்றம், போன்றவற்றை காண்பதை போல, காணப்படும் பொருளின் நிழல் தோற்றத்தை காணமுடியாது. ஒரே கறுப்பாக நிழலாக தான் காட்சி அளிக்கும். காணப்படும் பொருளின் அசைவுக்கு ஏற்ப தான் நிழல் தோற்றம் அசையுமே தவிர ஒருபோதும் நிழலுக்கு ஏற்ப காணப்படும் பொருள் தன்னை அசைத்துக் கொள்வதில்லை. மேற்கூறிய பொருள் எல்லாம் காணப்படும் பொருட்கள் ஆகும். அதன் நிழல் தோற்றம் தான் காண்பவன் ஆகிய நான் ஆகும்.

காண்பவன் என்பது நிழல் வடிவம் மட்டுமே. நாம் பொருளுக்கு தான் முக்கியத்துவம் கொடுப்போமே தவிர அதன் நிழல் தோற்றத்தை கண்டுகொள்வது கூட இல்லை. ஆனாலும் காணப்படும் பொருளோடு இந்த காண்பவன் என்ற நிழல் தோற்றம் எப்போதும் சேர்ந்தே தான் தோன்றும். காணப்படும் பொருள் மறையும் போது அதனால் உருவாகிய காண்பவனின் மாயத்தோற்றமும் மறைந்து விடும். **காண்பவன் என்பது காணப்படும் பொருளின் நிழல் தோற்றம் என்பதை மட்டும் தெளிவாக புரிந்து கொண்டால் போதும்.**

நிழல் தோற்றமான காண்பவனை பற்றி நமக்கு சரியான புரிதல் இல்லாததால்தான் காண்பவனின் கட்டுபாட்டில் காணப்படும் பொருள் வர வேண்டும் என்று முயற்சி செய்கிறோம். அது தான் நம்முடைய ஒட்டுமொத்த பிரச்சினைக்கும் காரணம், **காணப்படும் பொருளை தன்னுடைய கட்டுப்பாட்டில் காண்பவன் கொண்டு வர முயற்சிப்பது, நிழலின் கட்டுபாட்டில் நிஜத்தை கொண்டு வர முயல்வதே ஆகும்.** ஒரே எண்ணத்தின் இரண்டு பகுதிகள் ஒன்றை மற்றொன்று கட்டுப்பாட்டில் கொண்டு வர முயல்வது தான் எல்லா பிரச்சினைகளுக்கும் காரணம்.

காணப்படும் பொருளின் நிழல் தோற்றம்தான் காண்பவன் ஆகிய நான் என்பதை புரிந்து கொண்டு, தன்னுடைய தகுதியையும் இயலாமையையும் புரிந்து கொண்டு காணப்படும் பொருளை தன்னுடைய கட்டுப்பாட்டில் கொண்டு வரும் வீண் முயற்சியிலிருந்து காண்பவன் விடுபடுகின்றான். காணப்படும் பொருள் எல்லாம் தொடர்ந்து மாறிக்கொண்டு பிரவாகமாக ஓடுவதைபோல் காண்பவன் என்ற நானும் பிரவாகிப்பவனாக மாறி ஓடி மறைந்து விடுகின்றான். இப்படி 'நான்' பிரவாகமாக ஓடுவதைதான் நிரந்தரமான 'நான்' என்று ஒன்று இல்லை என்று பகவத் ஐயா கூறுகிறார்.





## கவலைகள் அனைத்திற்கும் தீர்வு - புதிய பதிப்பு

அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் எங்கள் அன்பான வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களில் பிரதான நூலான **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** என்ற நமது நூல் உங்கள் அனைவரது ஆதரவுடன் பரிசளிப்பு விலையாக ரூ.50/- க்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டு வருகிறோம். இதற்கு 24 அன்பு உள்ளத்தினர் தலா ரூ. 10,000/- வழங்கியிருந்தனர்.

அதன் காரணமாக பல்வேறு நபர்களுக்கு நமது கருத்துகளை வழங்கி உதவ முடிந்தது.

நாம் தமிழில் அச்சிட்ட இந்த நூல்கள் மட்டும் தீர்ந்து விட்ட நிலையில், இந்த நூலை நாம் மீண்டும் அச்சிட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இதற்கு ரூ. **10,000/-** வழங்கும் **25** அன்பு உள்ளத்தினர் மட்டும் தேவைப்படுகிறார்கள்.

**இத்தொண்டில் பங்கேற்ற அன்பு உள்ளம் கொண்ட திரு. சங்கரநாராயணன், கும்பகோணம் அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

இன்னும் 24 அன்பர்கள் தேவைப்படுகிறார்கள்.

இந்தப் பரிசளிப்பில் பங்கேற்க விரும்பும் அன்பு உள்ளங்களை, எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இவண், **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம். செல் : 99942 05880, 97891 65555



# ஆசிரியர் பகுதி

**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

ஆன்மிகம் என்றாலே அமானுஷ்ய அனுபவங்களை எதிர்பார்த்தே பலரும் வருகின்றனர்.

ஞானத்தையும் விடுதலையையும் கூட அமானுஷ்யத்தின் வரிசையில் வைத்தே கற்பனை செய்கிறார்கள்.

ஞானம் அமானுஷ்யமாக இருக்கும் பட்சத்தில் எங்கோ ஆயிரத்தில் ஒருவருக்குதான் பயன்படும்.

ஞானம் அறிவியலாக வழங்கும் பட்சத்தில் ஆர்வமுள்ள அனைவருக்குமே பயன்படும்.

இந்த விஞ்ஞான வளர்ச்சி அடைந்த உலகத்தில் எத்தனையோ புதிய கண்டுபிடிப்புகளால் நாம் பல வசதிகளை அடைந்து வருகிறோம். புதிய கண்டுபிடிப்புகள் ஒவ்வொன்றும் எவரோ ஒருவர் தனது மனதை கொண்டு புறவிஷயங்களை ஆராய்ந்ததால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஆனால் எல்லா கண்டுபிடிப்புகளுக்கும் காரணமான அந்த மனம் எப்படி இயங்குகிறது என்ற உண்மையைக் கண்டுபிடிப்பதைத்தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

எல்லா கண்டுபிடிப்புகளும் அனைவருக்கும் பயன்படாது. ஆனால் மனத்தின் இயற்கையான இயக்கத்தைப் பற்றிய கண்டுபிடிப்பான ஞானம் மனித குலம் முழுவதற்கும் பயன்படும்.

இதனை, தான் அடைந்து தனது ஆராய்ச்சியால் எளிமையாக்கி அனைவரும் எளிதாக புரிந்து கொள்ளும் வண்ணம் அறிவியல் ரீதியாக வழங்கி வருகிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

இதுவரை அமானுஷ்யமாக இருந்து எங்கோ ஒருவருக்கு மட்டும் பயன்பட்டு வந்த ஞானம், தற்போது அறிவியலாக மலர்ந்து புரிந்து கொள்ளும் அனைவருக்கும் பயன்பட்டு வருகிறது.

மனத்தின் இயக்க உண்மையைப் புரிந்து கொண்ட பலர் மனப்போராட்டங்களிலிருந்தும் துயரங்களிலிருந்தும் விடுபட்டு விடுதலையோடு வாழ்ந்து வருகின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானப் புரிதல் ஆன்மிகத்தில் தேடுதல் கொண்டவர்களுக்கும் மட்டுமல்லாது பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களாலும் புரிந்து கொள்ளும் வகையிலும் அவர்களுக்கும் மிகவும் பயன்படும் வகையிலும் அமைந்துள்ளது.

தற்போதைய சூழ்நிலையில் பள்ளி மாணவர்களின் கல்விக்கு தடையாக பல பொழுதுபோக்கு அம்சங்கள் வந்துவிட்டன.

அவர்களின் கவனம் கல்வியின் பக்கத்தைவிட மற்ற விஷயங்களிலேயே அதிகம் திசை திரும்பி இருக்கிறது. அதை மாற்ற முடியாமல் அவர்கள் தடுமாறுகிறார்கள். **பெற்றோர் மற்றும் ஆசிரியர்களின் அதிகப்படியான கண்டிப்பு அவர்களுக்கு மேலும் பிரச்சினையை உருவாக்குகிறதே தவிர தீர்வாக அமைவதில்லை.**

மேலும் தற்போதைய சூழலில் பெற்றோர் மற்றும் ஆசிரியர்கள் திட்டுவதையும் கண்டிப்பதையும் மாணவர்கள் அவமானமாக எடுத்துக்கொண்டு மனப்பாதிப்புக்கு உள்ளாகிறார்கள். பல மாணவ மாணவிகள் மன பாதிப்புகளை எதிர்கொள்ள முடியாமல் விபரீதமான முடிவுகளையும் எடுத்துவிடுகிறார்கள். இச்சூழ்நிலை நீடிக்கும்போது வருங்கால சமுதாயத்தின் நிலை கேள்விக்குறியாக மாறிவிடும்.

நமது பகவத் ஐயாவின் ஞானப் புரிதலை பாதிப்படைந்த சில மாணவர்களுக்கு மனத்தெளிவாக (Counseling) வழங்கும்போது, அவர்கள் அவர்களுடைய மனப் பாதிப்புகளிலிருந்து உடனடியாக விடுபட்டு நல்ல நிலைக்கு திரும்பி உள்ளனர். மேலும் எல்லா மனப் பிரச்சினைகளையும் எளிதாக கடந்து புறத்தில் தேவையான கல்வியின் பக்கம் கவனத்தை செலுத்த ஆரம்பித்துவிட்டார்கள். இந்த மனத்தெளிவால் நிரந்தரமான மன ஆரோக்கியம் பெறுவதோடு புறத்தில் நல்ல செயல்களையும் செய்ய தொடங்கிவிட்டார்கள்.

**இத்தெளிவைப் பெற்ற மாணவர்களுக்கு அவர்களுடைய வாழ்நாள் முழுவதும் இத்தெளிவு அவர்களுக்கு துணை நிற்கும். என்றும் மறையாது.**

எனவே மாணவர்களுக்கு என ஓர் வாழ்வியல் முகாம் அவர்களுக்கு தகுந்தார்போல் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மே மாதத்தில் வழங்க உள்ளார்கள். வாய்ப்புள்ளவர்கள் இதில் கலந்து கொண்டு பயன்பெற வேண்டுகிறோம். இதன் விபரம் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது.

**இதுவரை அமானுஷ்யமாக இருந்த மெய்ஞானம் அறிவியலாக மலர்ந்து இவ்வுலகையே சுபிக்ஷமாக்கட்டும்.**

புரிந்து கொள்வோம்! புரிதலை பகிர்வோம்!!

# ஸ்ரீ பகவத் பவன் புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று இம்மாதத்தில் புரவலராக இணைந்தவர் திரு. **S. சந்திரசேகரன்,** பெங்களூர்

புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 1590762000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

## வேண்டுகோள்

அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்,

நமது ஸ்ரீ பகவத் மிஷனின் குடும்ப உறுப்பினர் திரு. சேகர், திருப்பூர் அவர்கள் ஐயாவின் கருத்துக்களை அனைவருக்கும் கொண்டுசேர்ப்பதில் ஆர்வத்துடன் செயல்பட்டவர். திருப்பூரில் பல சத்சங்கங்களை ஏற்பாடு செய்தவர் ஸ்ரீ பகவத் மிஷனுக்காக இரண்டு ஆண்டுகள் காலாண்டரை இலவசமாக அச்சடித்து வழங்கியவர்.

இவர் கடந்த ஜனவரி 2ம் தேதி மாரடைப்பால் தன் இளம் வயதிலேயே காலமானார். தற்போது இவரின் மனைவி மற்றும் இரு குழந்தைகளும் பொருளாதாரத்தில் மிகவும் சிரமமான சூழ்நிலையில் வாழ்ந்து வருகிறார்கள். கணவர் செய்து வந்த ரெடிமேட் கார்மெண்ட் தொழிலை மீண்டும் எடுத்து செய்வதற்கு இவர்களுக்கு குறைந்த பட்சம் ரூபாய் ஒரு லட்சத்து இருபத்தி ஐந்தாயிரம் முதலீடு தேவையாக உள்ளது.

இவர்களது நிலையை கருதி நன்கொடை வழங்கி உதவியவர்கள்

| | | |
|---|---|---|
| **ஸ்ரீ பகவத் ஐயா** | - | ரூ. 5000/- |
| திரு. **இராஜகோபால்**, பரமத்தி வேலூர் | - | ரூ. 5000/- |
| திரு. **முத்துச்செல்வன்**, நாகப்பட்டணம் | - | ரூ. 5000/- |
| திரு. **சிவகுரு**, கரூர் | - | ரூ. 5000/- |
| திரு. **சரவணன்**, சேலம் | - | ரூ. 5000/- |
| திரு. **ஜீவமணி**, சேலம் | - | ரூ. 5000/- |

இவர்களது நிலையை கருதி வாய்ப்புள்ள அன்பர்கள் உதவித்தொகையை ரூ. 5000/- (அ) அதற்கு குறைவாகவோ அல்லது கூடுதலாகவோ கீழ்கண்ட வங்கிக் கணக்கில் அளித்து உதவுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம். **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 1590762000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **7904118421** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



திருவருட்சோலையில் ஸ்ரீபகவத் ஐயாவுடன் ரஷ்யா அன்பர்கள்



ஸ்ரீபகவத் ஐயா அன்பர்களுடன் சென்னை அன்பர் ஜமால் முகமது



நடைபயணத்திற்கு பிறகு ஓய்வில்...



வெஸ்ட் மாம்பலம் சத்சங்கத்தில்...



திருச்செந்தூர் இல்லத்தில் ஐயாவுடன் கிருஷ்ணவேணி குடும்பத்தினர் மற்றும் சின்னம்மாள்



ஸ்ரீபகவத் பவனில் Google Hangouts நிகழ்ச்சியில் ரஷ்யா அன்பர்களுடன்



ஸ்ரீபகவத் மிஷன் சென்னை மையத்தில் ஐயாவுடன் அன்பர்கள்...

## கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 3 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 28-4-2018 சனிக்கிழமை மதியம் 1 மணி முதல்
30-4-2018 திங்கள் மாலை 3.00 மணி வரை

**தலைப்புகள் :**

1. ஞானப்புரிதல்
2. அகம்-புறம்
3. நான் யார்?
4. நினைவும் சிந்தித்தலும்
5. மனோலயம் - மனோ நாசம்
6. கர்மவினை
7. தெளிவில் உறுதி



- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 3000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**Online Payment :** Credit Card or Debit Card மூலம் www.sribagavathmission.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : **9994205880, 97891 65555**

## TNPL கரூரில் ஒரு நாள் ஞான முகாம்




ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஒரு நாள் ஞான முகாம் கரூரில் மார்ச் மாதத்தில் நடைபெற உள்ளது.

இடம் : **TNPL Community Hall, Karur.**
நாள் : 18.3.2018 காலை 9.30 மணிமுதல் மாலை 6.00 மணிவரை

(நாள் இன்னும் உறுதியாகவில்லை 10.3.2018 க்கு பிறகு கீழ்கண்ட அலைப்பேசியில் உறுதிபடுத்திக்கொள்ளவும்.)

*அனைவரும் வாரீர்.*

மேலும் விபரங்களுக்கு

திரு. **சிவகுரு,** 94437 56296 திரு. **ஜீவமணி,** 97891 65555



# ஜென் கதை

## "கடலைத் தேடும் மீன்"

ஓர் ஆன்ம சாதகன் மெய்பொருளான இறை நிலையோடு கலந்து முழுமை பெற வேண்டும் என்பதையே வாழ்வின் இறுதி நோக்கமாக கருதி அதற்காக கடுமையான தியானங்களிலும், யோகப்பயிற்சிகளிலும் வெகு நாட்களாக ஈடுபட்டு வந்தான்.

ஆழ்ந்த தியானத்தில் ஈடுபடும் போது தன்னையே மறந்து சில மணிதுளிகள் இறைநிலையோடு கலந்து மீண்டும் தன் இயல்பு நிலைக்கு திரும்புவான் சாதகன்.

"தன்னால் தொடர்ந்து அந்த இறைநிலை உணர்வில் நீடித்து இருக்க முடியவில்லையே" என்று மிகவும் மனம் வருந்தினான். பயிற்சிகளில் தீவிரத்தை காட்டினான். உடலால் தவ ஆற்றலின் வெப்பத்தை தாங்க முடியவில்லை. மனநிலையும் பாதித்தது, வேறு வழி தெரியாமல் தவித்தான் சாதகன்.

வாழும் ஞானி ஒருவரை சந்தித்து தன்னுடைய நிலைமையை கூறி தனக்கு ஏதாவது உதவும்படி மன்றாடினான்.

"நீ எப்போதும் இருப்பது இறைநிலையில் தானே, பிறகு எதற்காக இறைநிலையுடன் இணைய வேண்டும் என்று பாடுபடுகிறாய்" என்றார் ஞானி.

"ஒன்றுமே புரியவில்லை ஐயா, கொஞ்சம் விளக்கமாக புரியும்படி கூறுங்கள்" என்றான் சாதகன்.

"உனக்கு உள்ளேயும், உனக்கு வெளியேயும் இருப்பதை நீ என்ன வென்று கூறுவாய்?" என்றார் ஞானி.

"இறைநிலை என்று தான் கூறுவேன். ஆனால் எனது அகத்தில் இருக்கும் இறைநிலையை எங்கும் நிக்கமற வியாபித்திருக்கும் இறைநிலையோடு கலந்திட வேண்டாமா?" என்றான் சாதகன்.

"உனக்கு உள்ளேயும், வெளியேயும் என இரண்டு இறைநிலை இருக்கிறதா?" என்றார் ஞானி.

"இறைநிலை என்பது ஒன்றுதான். அதுவே தான் எங்கும் நீக்கமற எல்லாவற்றிலும் நிறைந்து உள்ளது. ஆனால் என்னால் தான் நான் இறைநிலையில் இருக்கிறேன் என்பதை உணர்ந்து கொள்ளமுடியவில்லை? அது ஏன்?" எனக்கேட்டான்.

"தண்ணீரில் வாழும் மீன் தண்ணீரை தேடுவதற்கும் இறைநிலையிலே இருந்து கொண்டு இறைநிலையை தேடுவதற்கும் பெரிய வித்தியாசம் எதுவும் இல்லை" என்றார் ஞானி.

"இன்றும் எனக்கு புரியவில்லை சாமி" என்றான் சாதகன். "உன் வீட்டில் மாவு சலிக்கும் சல்லடையை பார்த்திருக்கிறாயா? அந்த மாவு சலிக்கும் சல்லடையில் உள்ள வலை போன்ற வடிவம் தான் நமது உடல். பல கோடி அணுகளின் தொகுப்பே நமது உடல். ஒவ்வொரு அணுவிற்கு உள்ளேயும், அந்த அணுவை சூழ்ந்தும் இருப்பது ஒரே இறைநிலை தான். சல்லடையில் உள்ள வலை பகுதி போன்றது தான் அணுகளின் தொகுப்பான நமது உடல். வலைப்பகுதியை தவிர்த்து எஞ்சிய பகுதி முழுவதும் ஒரே இறைநிலைதான் இருக்கிறது. இரண்டு இறைநிலை இருந்தால் தான் ஒன்றோடு ஒன்று கலந்திட முடியும்" என்றார் ஞானி.

"அப்படி என்றால் இவ்வளவு நாட்களாக நான் தான் சரியாக புரிந்து கொள்ளாமல் இறைநிலையில் இருந்து கொண்டே இறைநிலையை அடைய முயற்சி செய்து கொண்டு இருந்தேனா?" என்றான் சாதகன்.

"ஆமாம், ஒரே பரம்பொருள் தான் எல்லாமாக இருக்கிறது. அந்த மெய்பொருளேதான் எல்லா தோற்றங்களாகவும் உயிர்களாகவும் இருக்கிறது. நீ, நான் எல்லாமே இறைநிலையின் வெளிப்பாடே. இறைநிலையை நீ உணர வேண்டும் என்றால் நீ இறைநிலையை விட பெரிதாக இருக்கவேண்டும். நீ, இறைநிலை என்ற இருமை தன்மை மறையும் போது ஒரே இறைநிலையாகி விடுகிறாய். கடலில் எழுச்சி பெற்ற ஒரு நீர் துளி மீண்டும் கடலில் இணைவதை போன்றது தான் இறைநிலையானது...

"எழுச்சிபெற்ற நீ என்ற தன்னையும் தன்னுடைய உண்மை நிலையை உணர்ந்து கொண்டு அடங்கும்போது இறைநிலையாகி விடுகிறது" என்றார் ஞானி.

"இறைநிலையில்தான் இருக்கிறேன் என்பதை நான் புரிந்து கொள்ளதான் முடியுமே தவிர ஒருபோதும் இறைநிலையை அடைய முடியாது. அப்படி தானே" என்றான் சாதகன்.

"ஆமாம் கடல் போன்ற இறைநிலையோடு உன்னை ஒப்பிடும் போது நீ என்ற தன்மை கடலில் எழும் ஓர் நீர் துளி மட்டுமே. அந்த நீர் துளியும் கடலின்றி வேறு எதுவும் இல்லை. அந்த நீர் துளிக்கு தான் இத்தனை நாட்கள் அறியாமை என்ற இருள் இருந்தது. இப்போது அந்த இருள் நீங்கி தெளிவு என்ற ஞானம் பிறந்துள்ளது" என்றார் ஞானி.

வாழ்வின் முழுமைக்கான விடையை புரிந்து கொண்ட சாதகனுக்கு ஞானியின் விளக்கம் அமிர்தமே கிடைத்தது போன்ற உணர்வுடன் அவர்தம் பாதகங்களில் அப்படியே பணிந்தான் சாதகன்.

தோற்றங்கள் பலவாக இருந்தாலும் இருப்பது ஒரே மெய்பொருள் என்பதை நன்கு புரிந்து கொண்டு தேடுதலில் இருந்து விடுபட்டான் சாதகன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555